




தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பிரமாதிச புரட்டாசி (17-9-73) [கருணை 12

## *சிந்தாமணி விநாயகர்*

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழியாண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகனிறைவனடி வாழ்க

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க !
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய் கழல்கள் வெல்க !
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க !
கரங்குவிவார் உள்மகிழுங் கோன் கழல்கள் வெல்க !
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க !

— மாணிக்கவாசகர்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

*சந்தா அனுப்பவேண்டிய முகவரி :*

நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்

சென்னை – 600 087

# ஏன் வந்தாய்?



ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார்

கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் ஒரு நாள் ஒரு சிறு வீட்டில் தங்கியிருந்தார். அவ்வீடு தெற்கு நோக்கி இருந்தது. தெற்கு நோக்கிய வீடு சிறந்தது. வடக்கு நோக்கிய மச்சு வீட்டினும் தெற்கு நோக்கிய குச்சுவீடு மேலானது என்பது பழமொழி.

அக்குச்சு வீட்டிற்கு ஒரு மூங்கிற் கதவு. கம்பர் அந்த வீட்டில் இருந்துகொண்டு தமிழ்க்கவி பாடிக் கொண்டிருந்தார். அச்சமயம் காற்று வீசி அடிக்கடி கதவைத் தட்டியது.

கதவை யார் தட்டுகின்றது என்று கம்பர் கதவைத் திறந்து பார்த்தார் ஒருவருமில்லை. தென்றல் காற்று என உணர்ந்தார். அதனால் அவருடையகவியியற்றும் கவனம் சிறிது தடைபட்டது.

உடனே ஒரு வெண்பாவைப் பாடினார்:

"ஏ தென்றலே! உனக்கென்ன மதியில்லையா? முன்னொரு கால் சிறிதும் ஆராயாமல் குலசேகர பாண்டியன் ஒரு வீட்டின் கதவைத் தட்டி கை போன கதை உனக்குத் தெரியாதா" என்ற கருத்தில் அப்பாடல் அமைந்துள்ளது.

கொற்கை என்ற ஊர் முன்னாளில் துறைமுகப் பட்டினமும், பாண்டி நாட்டுத் தென்பகுதிக்குத் தலைநகரமாகவும் இருந்தது.

அந்நகரை குலசேகரன் என்ற பாண்டியன் அரசு புரிந்து வந்தான். அம்மன்னன் இரவில் மாறு

வேடம் புனைந்து நகர் காவல் புரிவான். குடிகளுக்கு இரவில் கள்ளர் பகைவர்களால் தீங்கு நேரக் கூடாது என்று கருணை நிறைந்த காவலன் இரவில் ஊரைச் சுற்றிச் சுற்றிப் பார்த்து காவல் புரிவான்.

ஒரு நாள், இரவு; நள்ளிரவில் காவல் புரியும்போது அக்ரகாரத்தில் ஓர் அந்தணர் காசி யாத்திரை போக மனைவியிடம் விடை கேட்டனர். மனைவி தனித்திருக்க அஞ்சுகின்றேன் என்றாள்.

அந்தணர் கருணை நிறைந்த நமது மன்னர் பெருமான் அருள் உனக்குத் துணை புரியும் என்று தேறுதல் கூறினார் அடுத்த நாள் அவர் காசி யாத்திரை சென்றார். இதனைக் கேட்ட குலசேகரப் பாண்டியன், அந்தணர் தனது அருளாட்சியை நம்பியே இளமையுடைய மனைவியைத் தனித்திருத்தி யாத்திரை சென்றுள்ளார்.

நாம் இனி அந்த வீட்டின் பாதுகாவலில் அதிகக்கவனம் செலுத்த வேண்டும் என்று எண்ணி இரவில் நகர் காவல் புரியும் போது அந்த அந்தணர் வீட்டினை அடிக்கடி கவனித்து வந்தார்.

ஆறு திங்கட்குப் பின் அவ்வீட்டில் ஓர் ஆண் குரல் கேட்டது. அரசன் நடு இரவில் இந்த வீட்டில் ஆண் குரல் கேட்கக் காரணம் யாது என ஐயுற்றான். உள்ளேயிருப்பவனை இன்னான என்று அறிய வேண்டும்; வீட்டு வேதியர் என்னையல்லவா நம்பி விட்டிருக்கின்றார் என்று கருதி, மெல்ல கதவைத் தட்டினான்.

உள்ளேயிருப்பவர் 'யார், அங்கே' என்றார். அவர் குரலால் அவர் யாத்திரை சென்று மீண்ட வீட்டு அந்தணர் என அரசன் உணர்ந்தான். இனி நடு இரவில் கதவைத் தட்டியதனால் அந்தணர் தன மனைவியின் கற்பொழுக்கத்தில சந்தேகிக்கக்கூடும். "அந்தோ நான் நல்லது செய்யக்கருதி தீமையாக முடிகின்றதே" என்று எண்ணிய வேந்தன், ஐயுறுதிருக்கும் பொருட்டு அத் தெரு முழுவதும் கதவைத் தட்டிவிட்டுச் சென்றான்!

மறு நாள் காலை அந்தணர்கள் அரசவைக்குச் சென்று, இரவில் ஒரு கள்ளன் வந்து எங்கள் கதவு களைத் தட்டி இடர்ப்படுத்தினான் என்றார்கள்.

மன்னன் நீதிபதியை அழைத்து 'ஏககாலத்தில் இத்துணை வீடுகளின் கதவுகளைத் தட்டிய கள்ளனுக்கு என்ன தண்டனை தர வேண்டும்?' என்று வினவினார்.

கள்ளனைக் கண்டு பிடித்து தோள்மட்டில் கரந்தனைத் துண்டிக்க வேண்டும் என்றார் நீதிபதி.

அரசன் நடந்தவற்றை விடுத்துக் கூறி, உடனே உடைவாளெடுத்துத் தன் கையை வெட்டிக் கொண்டான்!

எல்லோரும் இதனைக் கண்டு கண்ணீர் சிந்திக் கதறினார்கள், புலம்பினார்கள்; மன்னவனுடைய நீதியை எண்ணி அதிசயித்தார்கள். பின்னர் பொன்னால் கை போல் செய்து பொருத்தினார்கள். அதனால் அவனுக்குப் 'பொற்கைப் பாண்டியன்' என்ற பெயர் உண்டாயிற்று.

இந்த வரலாற்றை வைத்துக் கம்பர் அந்தப் பாடலைப் பாடினார். அப்பாடல் இதோ வருகின்றது. என்ன அருமையான தமிழ்! இக்கவியில் தொடையழகும், நடையழகும், சொற்சுவையும், பொருட்சுவையும் ஒருங்கே அமைந்துள்ளன.

கொற்கையான் மாறன் குல
சேகரப் பெருமான்
பொற்கையான் ஆனகதை
போதாதோ—நற்கமல
மன்றலே வாரிமணி வாசலை
அசைக்கத்
தென்றலே ஏன்வந்தாய்
செப்பு?



# பொன் மொழிகள்



மகாத்மா காந்தி

எல்லாவற்றிலும் பரவி நிற்கும் மர்மசக்தி ஒன்று இருக்கிறது. அது எத்தகையது என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. அதை என்னால் பார்க்க முடியவில்லை. ஆனால் அதை உணர்கிறேன். கண்ணுக்குப் புலனாகாத அந்தச் சக்தி, தான் இருப்பதை உணர்த்துகிறது. ஆனால்நிரூபணத்திற்கு அது அகப்படுவதில்லை, ஏனெனில் புலன்கள் வாயிலாக நான் உணரும் எல்லாப் பொருள்களிலும் இருந்து அது முற்றிலும் வேறுபட்டிருக்கிறது. அது பகுத்தறிவுக்குப் புறம்பானது. ஆயினும் கடவுள் இருப்பதைப் பகுத்தறிவின் மூலமும் ஓரளவுக்கு நிரூபிக்க முடியும்.

நாம் எல்லாரும் உணருகின்ற, விளக்க முடியாத நமக்குப் புரியாத ஒரு வஸ்து கடவுள். அவர் பரம பரிசுத்தமான சாரப் பொருள். அவருடைய உருவ விளக்கம் தேவைப் படுவோருக்கு அவர் உருவமுள்ளகடவுள். அவருடைய ஸ்பரிசம் தேவைப்படுவோருக்கு அவர் தேகத்துடன் இருக்கிறார்.

நான் எவ்வளவு அதிகமாகக் கடவுளைச் சரண் அடைந்தேனோ அவ்வளவு அதிகமான ஆனந்தத்தைப் பெற்றிருக்கிறேன்.

"கடவுள் இருப்பதைத் தர்க்க வாதத்தின் மூலம் நிரூபிப்பதற்கு ஆதாரமாக எண்ணற்ற காட்சிகள் உள்ளன. ஆனால் பகுத்தறிவு பூர்வமான அத்தகைய விளக்கம் கொடுத்து உங்கள் அறிவை நான அவமதிக்கப் போவதில்லை. பகுத்தறிவு விளக்கங்களை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு அப்பாவிக் குழந்தையைப்போல நீங்கள் கடவுளிடம் நம்பிக்கை கொள்ளத் தொடங்க வேண்டும்என்று விரும்புகிறேன்."

"நம் ஒவ்வொருவருள்ளும் கடவுள் வசிக்கிறார் என்பதை உணருவது அவசியமாகிறது."

அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்றமுதுமொழியில் அடங்கியுள்ள உண்மையை நான் முழுக்க முழுக்க நம்புகிறேன்.

என்னை மேலும் மேலும் தூய்மைப் படுத்திக் கொள்ள முயலும்போது கடவுளை நான்மேலும் மேலும் நெருங்குவதாக உணர்கிறேன்.

கடவுள் நம்மை மேன் மேலும் சோதிக்கிறார். நம் நம்பிக்கையும்

தேகமும் சோர்ந்து போகும் போது அவர் எப்படியாவது நமக்கு உதவி செய்ய வந்துவிடுகிறார் நம்பிக்கையை நாம் இழக்கக்கூடாது என்றும், நாம் கூப்பிட்டவுடன் தாம் வரத்தயாராய் இருப்பதாகவும் அவர் எடுத்துக் காட்டுகிறார் ஆனால் அவர் வருவது என்பது அவர் விருப்பத்தைப் பொறுத்தது. நம் விருப்பத்தைப் பொறுத்ததன்று.

கடவுள் மேலானவர். கருணை நிறைந்தவர் தாங்க முடியாத அளவுக்குத் தம் அடியார்களை அவர் சோதிக்கமாட்டார்.

ஹிந்து சாஸ்திரங்கள குறிப்பிடும் கடவுளின் சஹஸ்ர நாமங்களைப் பாராயணம் செய்யும்படி இளம்பிராயத்தில் எனக்குப் போதித்தார்கள், ஆனால் கடவுளுக்கு இந்த ஆயிரம் பெயர்கள் தாம் உண்டு என்பதில்லை எத்தனை ஜீவ ராசிகள் உள்ளனவோ அத்தனை நாமங்கள் ஆண்டவனுக்கு உண்டு என்று நாம நம்புகிறோம். இது உண்மை என்பது என் கருத்து. அதனால்தான் கடவுளைப் பெயரில்லாதவர் என்றும் நாம் குறிப்பிடுகிறோம். கடவுளுக்கு எத்தனையோ உருவங்கள் இருப்பதால் அவரை உருவற்றவர் என்றும் நாம் கருதுகிறோம்.

அஹிம்சை மிக உயர்ந்த சக்தியாகும். அது ஆத்மசக்தி; நம்முள் இருக்கும் தெய்வீக சக்தி; முழுமை பெறாத மனிதனால் அந்த சாரம் முழுவதையும் கிரகித்துக் கொள்ள முடியாது. ஆனால் அதில் ஒருதுளி நயமுள் இயங்க ஆரம்பித்தால்கூட அற்புதங்களை நிகழ்த்த முடியும்.

●

# ஞான விருந்து



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

முற்றிலும் மனவமைதி பெற்ற வனிடத்தில் எப்பொழுதும் ஆனந்தம் பொலிகின்றது. அவன் அடையும் ஆனந்தத்திற்கு மூவுலக சுகங்களும் ஈடாகாது.

ஆன்மீக வாழ்க்கைக்குத் தெளிந்த மனம் உறுதியான அடிப்படையாகும். தெளிந்தமன திலே தான் திவ்ய ஒளியும் பிரகாசிக்கும். அத்தகைய மனமேதான் தெய்வீக உணர்ச்சிகளையும் கிரகிக்க வல்லது.

ஆசைகளிலிருந்து முற்றிலும் விடுபட்டவனும், பொறிகளை அடக்கி ஆளுபவனும், எத்தகைய ஆபத்துக்களிலும் மனங்கலங்காது யாண்டும் சமநிலையிலேநிற்பவன் தான் மனவமைதியைப் பெற்றவனுவான்.

அன்றாடம் பிரார்த்தனை, ஜபம் தியானம் முதலிய ஆன்மீக நெறிகளை வழுவாது கடைப்பிடித்துவந்தால் உன்னில் மனவமைதி தானுகவே அமையும்.

பணிவும் எளிய வாழ்க்கையும் ஒருவனை அமர நிலைக்குககொண்டு செல்லும். கர்வமும் ஆடம்பர வாழ்க்கையும் அவனை பிறப்பு-இறப்பாகிய சக்கரத்தில் மீண்டும் மீண்டும் சுழல வைக்கும்.

பணிவு மற்றவர்களைத்தன்பால் ஆகர்ஷிக்கின்றது. கர்வம் மற்றவர்களைத் தன்பால்அணுகவொட்டாது தடுக்கின்றது.

உண்மையான பணிவு பூரண ஆத்மீக வளர்ச்சியின் விளைவாக ஏற்படக்கூடிய ஒப்பற்ற சக்தியாகும்.

எஃகு அல்லது கருங்கல்லைக் காட்டிலும் அகந்தை மிகவும் கடினம். ஆயிரம் குண்டுகள் சேர்ந்து ஒருதேசத்தையோநகரத்தையோ நிர்மூலமாக்கலாம். ஆனால் உலகிலுள்ள எல்லா குண்டுகளும் சேர்ந்து வெடித்தாலும் அகந்தையாகிய கோட்டையைத் தகர்க்க முடியாது. இதைத் தகர்க்கவல்லது எல்லையற்ற சக்தியையுடைய பணிவு என்ற ஒரே குண்டுதான்.

பணிவை மேற்கொள்பவனே மூவ்வுலகத்தையும் ஆளவல்லவன் யாவரையும் வசிகரிக்க வல்லவன்.

பேராசையே எல்லா தீச்செயல்களுக்கும் காரணம். பேராசையின் விளைவே குழப்பமும் நாசமும். எனவே பெருந்தன்மை-பக்ஷபாதமின்மை-நேர்மை-திருப்தி - பிறர் பொருளை விரும்பாமை-விவேகப்-வைராக்கியம் - ஆகியவைகளின் மூலம் பேராசையை ஒழி.

விசுவாசம் - வாய்மை - பிரம்மச்சரியம்-சத்சங்கம் ஆகியவைகள் தெய்வீக சம்பத்துக்களாகும்.

சந்துஷ்டியே மேலாம் ஐஸ்வரியம்; மனவமைதியே அபூர்வமான ஆபரணம்; வாய்மையே உற்ற நண்பன்.

உள்ளுணர்வைப் பெற்றவனே மேலோன்.

உனது அந்தராத்மாவே உனது இணை பிரியாத நண்பன்.

ஒருவர் மாட்டும் பொருமை கொள்ளாதே, ஒருவரையும் அவதூறு பேசாதே. ஒரு பொழுதும் பொய்பேசாதே. ஒருக்காலும் வஞ்சிக்கும் மனப்பான்மையையும் விஷத்தன்மையையும் உன்னில் வளர்க்காதே. அப்பொழுது சாந்தியும் சந்தோஷமும் தானாகவே உன்னில் பெருகும்.

இளகும் மனம். ஈகைத் தன்மை இன்சொல் பேசும் சுபாவம், சேவை செய்யும் மனப்பான்மை சம திருஷ்டி, ஓரம் சாராமை ஆகிய இவைகளைக் கொள்வாயாகில் நீ கிருதார்த்தனாவது உறுதியே.

உனது குறைபாடுகளைக்குறித்து மிகவும் நொந்துகொள்ளாதே. ஆண்டவனில் பூரண நம்பிக்கை வைத்து சதா அவன் நினைவாகவே இருந்து நற்குணங்களை உன்னில் வளர்த்துக்கொள். அப்பொழுது உனது குறைபாடுகள் யாவும் தாமாகவே ஒவ்வொன்ருக மறைந்து பட்டுப்போகும்.

பிரம்மச்சரியத்தைக் குதிரையாகவும், பொறுமையைச் சேணமாகவும், பகுத்தறிவையும் மனோதைரியத்தையும் அம்புகளாகவும் விழிப்பை வாளாகவும், மனத்தெளிவைக் கேடயமாகவும், கொண்டு உனது இதயமாகியப் போர்க்களத்தில் புகுந்து உனது எதிரியாகிய மனத்தின் கொட்டத்தை அடக்கி வெற்றியுடன் பேரானந்த வாயிலை அடைவாயாக.

எந்தச் சூழ்நிலையிலும் உன்னைத் திருத்தி அமைத்துக் கொள்ளக் கற்றுக் கொள். அப்பொழுது தான் உன்னில் சாந்தி பெருகும்.

உண்மையானபலம்உறுதியான அசைக்க முடியாத-மனோ சக்தியின் விளைவாக ஏற்படக்கூடியதேயல்லாதுவியாயாமத்தினுலோ இறைச்சி-மீன்-முட்டைகளை உண்பதினுலோ ஏற்படக்கூடியதல்ல. எனவே ஆத்ம தியானத்தின் மூலம் இவ்வொப்பற்ற ஆத்மீக சக்தியைப் பெற்றுப் பெறுநிலையை அடைய முயல்வாயாக!

தவமே மனிதனுக்கு மேலாம் மேன்மையை அளிக்கவல்லது. தவத்திற்கு ஆதாரம் தன்னடக்கமும் களங்கமற்ற தெள்ளிய மனோநிலையுமாகும்.

தவமே மன உறுதிக்கும்-இதய சுத்திக்கும்- பொறி அடக்கத்திற்கும்-ஆத்ம தரிசனத்திற்கும்ஹேது வாக இருக்கின்றது.

பற்றற்ற தன்மையேதான் துக்கம்-கவலை-பீதிகளை ஒழித்து மன

துக்கு ஆறுதலையும் சுயேச்சையை யும் தாவல்லது. எனவே மனக் கட்டுப்பாடின் மூலம் பற்றற்ற தன்மையைப் பெற முயற்சி செய் வாயாக!

தியாகம், தன்னடக்கம், மனப் பரிசுத்தம் பொறி அடக்கம், மனக் கட்டுப்பாடு ஆகியவைகளை பயி லாது பரிபூரணத்தன்மையை ஒரு காலும் அடைய முடியாது.

எல்லா உருவங்களும் கடவு ளின் அம்சங்களே. இவ்விஷ யத்தை நீ எப்போதும் ஞாபகத் தில் வைத்திருப்பாயானல் உன் னுடைய மனோபாவனை புதிதாகி விடும். பற்று, வெறுப்பு முதலிய வைகளிடமிருந்து நீ விடுதலை அடைவாய்.

நல்லவன் சற்று நெருங்கி அணுகியிருக்கும் அதே பரம் பொருளை நோக்கித்தான் தீய வனும் பரிணாமமடைந்து நெருங் கிக் கொண்டு வருகின்றான். ஆகவே நாம் யாரையும் வெறுக்க வேண்டாம்.

குரு சேவையில் நீங்கள் எவ் வளவுக்கெவ்வளவு அதிகமான சக்தியை செலவிடுகின்றீர்களோ அவ்வளவுக்கவ்வளவு தெய்வீக சக்தி உங்களுக்குள் பாய்ந்தோடி வரும்.

எவர் குருவிற்கு சேவை செய் கின்றாரோ அவர் அகில உலகிற் கும் சேவை செய்கின்றவர் ஆகி றார். குரு சேவை செய்யும் பொழுது உங்களுடைய அந்த ரங்க நோக்கத்தை சோதித்துப் பார்த்துக்கொள்ளுங்கள். பெயர் புகழ், அதிகாரம், செல்வம் முதலி யவைகளை எதிர்பாராது குரு விற்குச் சேவை செய்தல் வேண் டும்.

எல்லோருடைய உபதேசங் களையும் காது கொடுத்துக் கேளுங்கள். ஆனால் ஒருவரை மட்டும் பின்பற்றுங்கள். எல் லோருக்கும் மரியாதை செய்யுங் கள். ஆனால் ஒருவரை மட்டும் பூஜியுங்கள். எல்லோரிடமிருந் தும் ஞானத்தைச் சேகரித்துக் கொள்ளுங்கள். ஆனால் ஒரு குருவினுடைய உபதேசத்தை மட்டும் சொந்தமாக்கிக் கொள் ளுங்கள். அப்பொழுது உங்க ளிடம் துரிதமான ஆன்மீக முன் னேற்றம் ஏற்படும்.

குருவே கடவுள். அவரிட மிருந்து வரும் வாக்கு கடவுளிட மிருந்து வரும் வாக்காகும். அவர் எதையும் உபதேசிக்க வேண்டிய தில்லை. அவருடைய சான்னித் தியம் அல்லது சத்சங்கமே உள் ளத்தை உயர்த்தக் கூடியதாக வும், தூண்டிவிடக் கூடியதாக வும் ஊக்கமூட்டக் கூடியதாக வும் இருக்கிறது. அவருடைய சத்சங்கமே ஆத்ம ஒளியாகி உள் ளது. அவருடைய சத்சங்கத்தில் இருப்பதே ஆன்மீகக் கல்வி யாகும்.

● மற்றவர் பாராட்டுவதையோ, திட்டுவதையோ, அறிவாளிகள் பொருட்படுத்துவதில்லை. எவ்வளவு காற்றடித்தாலும் கற்பாறை அசையாது.

● உன் உழைப்பினால் அபூர்வமான பொருள் ஏதேனும் கிடைத்து. அது ஈனமானதாக இருந்தாலும் அதற்குப் பயன் உண்டு!

— அல்லாமா இக்பால்

# அறிவு



வள்ளலார்

பெண்—ஆண் என்னும் நாம பேதம் வருவானேன்? அறிவின் உணர்ச்சி தாழ்ச்சியால் என்க. ஆன்ம அறிவு ஆண். ஜீவ அறிவு பெண். ஆன்ம அறிவு என்பதும் ஜீவ அறிவு என்பதும் புத்தி அறிவும் மன அறிவுமாம்.

இவ்வுலகில், கொடுமைகள்—தீவினைகள்—காடு போல் மண்டிக்கிடந்தன. அந்தக் கொடுவினைக் காடுகள் இன்று வேரோடு வெந்து சாம்பலாயின. கொடிய பெரிய வஞ்சனைகள் வளர்ந்து கொண்டிருந்தன; அந்த வஞ்சனைகள் இனி வளர்ச்சியடைய முடியாது அழிந்தன. இப்பொழுது உண்மையான அறிவு வந்துவிட்டது. அதுவும் நன்ருக—அழிக்க முடியாததாக- உறுதியாகவளர்ந்துவிட்டது. நினைக்கும் செயல்களையெல்லாம் செய்து வெற்றியடையும் வல்லமையைத் தந்துவிட்டது.

மக்களிடம் அபிமானமற்றவர்கள், சுய நலவாதிகள் பொய்நூல்கள் புகலுகின்ற சமயங்களை உண்மை யென்றெண்ணி பிடித்துக் கொள்ளுகின்றனர். அர்த்தமின்றி வீண் ஆரவாரம் செய்கின்றனர். அவர்களைப்போல நானும் இப்பேருலகில் வீணுக அழிந்து போக நினைக்கமாட்டேன். உயர் நிலையை அடையவே விரும்புகின்றேன். அறிவுக் கதவைத் திறந்து இன்னமுதம் அளிப்பாய். அறிவினுல் பல காரியங்களையும் சாதிக்கும்படிச் செய்வாய். என் உள்ளத்தில் நடமாடும் ஒப்பற்ற அறிவொளியே!

என்னுடைய உறக்கம் ஒழிந்தது; விழிப்படைந்தேன்; அறிவுச் சூரியன் உதயமாகிவிட்டான்; அவனுடைய ஒளியால் என்னை அடிமையாக்கிய தளைகளைக் கண்டறிந்தேன்; அவைகளை அறிந்தெறிந்தேன்; துன்பத்தைத்தொலைத்தேன்; விடுதலை பெற்றேன்; இன்பத்தை நுகர்கின்றேன்.

நூல்களைப் படிக்காமலே உலக நிலைமையை உணர்ந்துகொள்ளும் படியான அறிவை எனக்களித்

தாய். மற்றும் செய்யக்கூடிய செயல்களுக்கெல்லாம் ஆதாரவாகவும்இருக்கின்றாய். இரக்கத்தோடு கூடிய பேரறிவாகிய நீதான் இந்த நிலையை எனக் களித்தாய்.

ஏடுகளிலே — சாத்திரங்களிலே வேத புராண இதிகாசங்களிலே, எழுதப்படாத இரகசியங்களையெல்லாம் என் உள்ளத்தில் களிப்போடு எழுதச்செய்தாய்;எனக்கே உரிமையாக என் உள்ளத்தில் வளர்ந்திருக்கின்ற அறிவே!

இடம்பத்தையும், ஆரவாரத்தையும், பிரயாசையையும், பெருமறைப்பையும், போது போக்கையும் உண்டுபண்ணுகிற ஆரியம்முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்ல வொட்டாது, பயிலுதற்கும், அறிதற்கும் மிகவும் இலேசுடையதாய், சாகாக்கல்வியை மிகவும் இலேசில் அறிவிப்பதாய் திருவருள்வலத்தால் கிடைத்த தென்மொழி ஒன்றனிடத்தே மனம்பற்றச்செய்து, அத்தென்மொழியால் பலவகைத் தோத்திரப்பாட்டுக்களைப் பாடுவித்தருளினீர்.

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபட விரிந்த அளவிறந்தசமயங்களும்,அச்சமயங்களில் குறித்த சாதனங்களும் தெய்வங்களும் கதிகளும் தத்துவ சித்தி விகற்பங்களென்றும், அவ்வச் சமயங்களில் பலபட விரிந்த வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், சாத்திரங்கள் முதலிய கலைகளெல்லாம் தத்துவ சித்திக் கற்பனைக் கலைகளென்றும், உள்ளபடியே எனக் கறிவித்து அச்சமயாச்சாரங்களைச் சிறிதும் அனுட்டியாமற் தடை செய்வித் தருளினீர்.

இராமலிங்க சுவாமி என்று வழங்குவிப்பது என் சம்மதம் அன்று என்னை? ஆரவாரத்திற்கு அடுத்த பெயராகத் தோன்றுதலின், இனி அங்ஙனம் வழங்காமை வேண்டும்.

தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாது இவ்வுலகத்தார் என்னைத் தெய்வம் எனச் சுற்றுகிறார்கள். ஐயோ! நம் சகோதரர்கள் தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாதததாலேயல்லவா நம்மைசுற்றுகிறார்கள் என்று நான் உள்ளும் புறமும் பரிதாபப்பட்டுக்கொண்டே இருந்தேன்;இருக்கின்றேன்;இருப்பேன்.

உலகெலாம் பெரியவர் பெரியவர் எனவே சிறக்கவும் ஆசையில்லை.

மூவாசைகளில் விசேஷப் பற்றுள்ளவர்களாகித் தயையில்லாத கடினசித்தர்கள், சந்நியாசம்பெற்றுக்கொள்ளவேண்டும்.

அக்குற்றத்தை நீக்கினவர்கள் சந்நியாசம் செய்துகொள்ள வேண்டியதில்லை. குடும்ப சந்நியாசிகளாக இருக்கலாம்.

யாரிடத்தில் தயவு அதிகப்பட்டிருக்கின்றதோ, அவரிடத்தில் கடவுளிருக்கின்றார். அந்தத்தயையில்லாதவர்களிடத்துக் கடவுள் இருந்துமில்லாமையாய் இருக்கிறார். கடவுளிடத்தில் சதா அன்பும் பக்தியும் செலுத்தவேண்டும்.

அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை

# பொன் மொழிகள்



ஸ்ரீமத் ஸத்குரு
சாந்தானந்த ஸ்வாமிகள்

அன்பு அன்பு என்கிறீர்களே அன்புக்குள் சக்தியில்லை என்றால் அன்பைக் கடவுளும் விரும்பமாட்டான்.

உனக்குள்ளிருக்கும் ஆத்ம சக்தியே பராசக்தியாகும். பராசக்தியே பரப்பிரம்மம் ஆகுமென்பதை நீ மறந்து விடாதே.

தன்னைத்தான் யார் என்று அறிந்து கொள்ள இவ்வுலகிற்கு வந்த நீ பிறரை நினைப்பது மிகப் பெரிய கேடான விபசாரமாகும். மறவாதே ஜாக்ரதை.

சங்கல்பமற்றிருந்து விடு. சாந்திமயமாகி விடுவாய். மறவாதே.

நல்லறிவுடையோய்! உன்உடம்புகளுள் உள்ள ஜீவனை நீ சிவலிங்கமாக்கிவிடு. உன உடம்பு உலகம் போற்றும் மிகப் பெரிய புனிதமான சிவ க்ஷேத்திரமாகி விடுமென்பதே நீ மறவாமலிருந்து வா.

நேர்மையற்றவன் பேசுவதற்கு அஞ்சுவான்.

உன்னை நீ அறிவதில் உன் வாழ்நாளைப் பயன்படுத்துவதே உனக்கு நீ செய்து கொள்ளும் நன்மையாகும்.

மன உறுதி ஒன்று மாத்திரம் உனக்கிருந்தால் போதும். நீ வெற்றி பெறுவாய்.

தன்னை இன்னாரெனத்தான் அறிந்து கொள்ளாமலே தன்னைத்தானே மிகப் பெரிய அறிவாளியாக நினைத்துக் கொள்பவனைப் போல் முழு முட்டாளை நீ கண்டிருக்கிறாயா. எவனிடம் தற்புகழ்ச்சி இருக்கிறதோ அவனே அறிவிலி, முட்டாள். தன்னை அறிந்து கொள்ளாதவன் என்பதை மறவாதே.

ஆசையற்ற மனத்தில் கேடுகள் நுழைய முடியாது.

உனக்கு இந்தப் பொய் (ப் பொருளில்) யுலகில் ஆசையிருந்

தால் நரகத்தில் கொண்டு உன்னைச் சேர்த்துவிடும்.

இம்மையில் தனக்குள் தன்னைத் தான் அறிந்து கொள்ளாதவன் உலகுக்கு (பூமிக்கு) மிகப்பெரிய பாரமாவான்.

கடவுளை நீ சரணமடைந்து விடுவாயானால் உன் உள்ளம் அருள் மயமாகி விடுமென்பதை மறவாதே.

தன்னைத் தனக்குள் அறிந்து இன்புற வேண்டிய நீ புறத்தில் மனத்தைச் செலுத்த அலைய விடுவதினால் உனக்கு நீயே துக்கத்தை ஏற்படுத்திக் கொண்டவனாகிறாய்.

உனக்கு நற்குணங்கள் உண்டாகவேண்டுமானால் நிராசையுடன் குருகைங்கர்யத்தை இடைவிடாமல் சொன்னபடி செய்து வா.

உனக்கு உண்டாகும் தீய உணர்ச்சிகளை மாற்ற வேண்டுமானால் கடவுளின் திருநாமத்தை நாத்தழும்பேற ஏத்தி வா.

துன்மார்க்கத்தில் உள்ளத்துணிவுள்ளவன் அரக்கனாவான்.

நீ உலகைப்பற்றி சிந்தனை செய்வதற்கு ஒன்றுமேயில்லை. உலகம் மித்தையேயாகும்.

காமக் குரோதமுள்ளவரை நீ கடவுளைக் காண முடியாது.

உயிர் போகு முன் தன்னை அறிந்து கொள்பவனே ஞானியாவான். அவனுக்குப் பிறவி வாராது.

வேற்றுமைகள் அனைத்தும் மாபாகார்யமென்பதை நம்பி விடு.

செய்த தவறையே மீண்டும் மீண்டும் செய்பவன் மானிடப் பிறவியை வீணாக்கி விட்டவனாகிறான்.

ஆணவமிருக்கும்வரை ஆத்மா பிரகாசிக்காது.

அகந்தையுள்ளவனுக்கு பக்தி உண்டாகாது.

அஞ்சாமை யிருப்பவன் கெஞ்ச மாட்டான்.

உண்மையில்லாதவன் லட்சியத்தை அடைய முடியாது.

கடவுளை சத்தியமாக நம்பினவனுக்கு தரித்திரம் இராது.

சங்கல்பமற்ற மனத்தில் கடவுள் ஸ்வயம் பிரகாசமாக இருந்து வருவார். மறவாதே.

கடவுளுக்குத் தொண்டு செய்து வாழவே நீ பிறந்துள்ளாய்.

கடவுள் படைப்பைக் குறை கூறாதே கடவுள் படைப்பில் நீயும் ஒருவன் என்பதை மறவாதே.

உன் உடம்பைக் கோயிலாக்கி விடு. கவலையற்று விடும்.

உன் சொந்த வீடு இருக்குமிடம் கடவுள் என்பதை மறந்து விடாதே.

# ஆத்மா

ஆதிசங்கரர்

வைராக்கியத்தின் பயன் ஞானம்; ஞானத்தின் பயன் விஷய சுகங்களை நாடாமல் ஆத்மானந்தத்தை யனுபவித்தல்; அதனால் விளைவது பரம சாந்தி.

அகங்காரத்தின் வேரையறுத்து அதை எரித்துச் சாம்பலாக்குவது உண்மையான ஞானத்தின் இயல்பு. அப்பொழுது செயல் புரிபவனும் இல்லை. செயலின் பயனை அனுபவிப்பவனும் இல்லை.

முக்தியை விரும்பி ஒருவன் கங்காஸாகரத்திற்குயாத்திரை செல்லலாம், விரதமிருக்கலாம், ஏழைகளுக்கு தானம் செய்யலாம். ஆனால் ஞானமின்றி இவை முக்தியளிக்கமாட்டா.

ஆத்ம ஞானம் இங்கேயே இப்பொழுதே முக்தியளிக்கிறது. ஞானத்திலிருந்துதான் முக்தி என்பது உபநிஷதங்களில் நிரூபிக்கப்பட்ட உண்மை.

ஞானத்தால் இங்கேயே, இப்பொழுதே, உடனே பயன் கிட்டுவதால், ஞானத்தால் என்ன பயன் என்ற அச்சத்திற்கு இடமே இல்லை.

வேதாந்தத்தின் விஷயமான ஞானம் சித்தித்தால், ஜீவனே பிரம்மம் என்ற அனுபவம் ஏற்படும். அதனால் ஒருவன் பிறவித் தளையினின்று முற்றும் விடுபடுகிறான்.

ஆத்மஞானத்திற்கொப்பானது வேறெதுவுமில்லாமையால், ஒருவன் எப்பொழுதும் சீடனுடைய குணங்களைக் கைக்கொண்டு ஞானத்தைச் சம்பாதித்துப் பிறவிக் கடலைக் கடந்து செல்லவேண்டும்.

எனக்கு ஞானத்தை அளித்து அஞ்ஞானம் நிறைந்ததும் பிறப் பிறப்பு வடிவானதுமான ஸம்ஸாரஸாகரத்தினின்று என்னைக் காப்பாற்றியவரும், போற்றுதற்குரியவர்களிற் சிறந்தவரும், எல்லாமறிந்தவருமான எனது குருநாதரை வணங்குகிறேன்.

அஞ்ஞான இருளிருந்தபொழுது இவ்வுலகம் முழுதும் உண்மையெனப் புலப்பட்டது. ஞான சூரியன் உதித்த பிறகு உலகைநான்காணவில்லை. இது ஆச்சரியம்.

ஸத்தும் சித்துமே வடிவான ஆத்மாவை இடைவிடாத அப்பியாஸத்தாலன்றி அறிய முடியாது ஆகையால் ஞானத்தைநாடு

பவன் தன்னுடைய லக்ஷ்யத்தைய டைய நீண்ட காலம் தியானம் பழகவேண்டும்

ஒரு விளக்கானது குடம் முதலி யவற்றைப் பிரகாசப் படுத்துவது போல் ஆத்மா ஒன்றே புத்தி முத லியவற்றையும் இந்திரியங்களை யும் பிரகாசப்படுத்துகிறது. ஜட மான அவற்றால் ஆத்மா பிரகாச மடைவதில்லை.

எப்படி ஒரு விளக்கைக் காண்ப தற்கு வேறொரு விளக்கு வேண் டப்படுவதில்லையோ அப்படியே அறிவு வடிவான ஆத்மா தன்னைப் பிரகாசப்படுத்துவதற்குவேறொரு அறிவை வேண்டுவதில்லை.

ஆத்மா தன்னை ஜீவன் என்று கொண்டால், ஒருவன் பழுதை யைப் பாம்பு என்று கொண்டால் பயப்படுவது போல் பயத்துக்குள் ளாகிறது. தான் ஜீவனன்று, தான் பரமாத்மா என்று அறிந்தனுப விக்கும் பொழுது பயமின்மையை மீண்டும் அடைகிறது.

புத்திமான் தன்னுடைய அறி வால் காணும் உலகனைத்தையும் ஆத்மாவில் ஒடுக்கி ஆத்மாவா னது களங்கமற்ற ஆகாயம் போன்றதென்று எப்பொழுதும் தியானிக்க வேண்டும்.

அருணோதயத்தால் இருளா னது முதலில் நீக்கப்பட்டபின் சூரியன் தானே பிரகாசிப்பது போல் அஞ்ஞானம் ஞானத்தால் நீக்கப்பட்டபின் ஆத்மா தானே பிரகாசிக்கும்.

ஆத்மா எப்பொழுதும் அடை யப்பட்டதாயிருப்பினும் அஞ்ஞா னத்தால் அடையப்படாதது போல் தோன்றுகிறது. அஞ்ஞா னம் நீங்கியதும் ஒருவன் தன் கழுத்தில் ஏற்கனவே இருந்த ஆப ரணத்தைக் கண்டு கொள்வது போல் ஆத்மா அடையப்பட்டது போல் பிரகாசிக்கிறது.



---

● கோபத்தைச் சாந்தத்தால் அடக்கு. தீமையை நற்செய லால் விலக்கு. அற்ப புத்தியுள்ளவனை உதார குணத்தால் வென்று விடு. அப்பொழுதுதான் நீ நேர்மையாக வாழ முடியும்.

இரண்டுவித மனிதர்தான் ஆத்ம ஞானம் அடைய முடியும். எவரெனின், கல்வியறிவால் பாதிக்கப்படாத மனதுடையவர்களும், அதாவது பிறருடைய கருத்துக்கள் இரவல் பெற்று மூளையில் திணித்து வைத்திராதவரும், எல்லாவற்றையும் கசடறக் கற்ற பிறகு தமக்கு ஒன்றும் தெரியாது என்று அறியப் பெற்றவரும் ஆகிய இவ்விருவகை மனிதரே!

—சுவாமி இராமகிருஷ்ணர்

# திருவிளையாடல் கதைகள்

## விறகு விற்ற கதை

வித்வான் வே. அண்ணாமலை



வரகுண பாண்டியன் மதுரையை ஆண்டுவரும் பொழுது, வடநாட்டிலிருந்து ஏமநாதன் என்ற ஒரு யாழ்ப்பாணன் வந்தான். பாண்டியன் சபையில் தன் யாழ் இசைப் புலமையை வாசித்துக் காட்டினான். பாண்டியன் மகிழ்ந்து அவனுக்குப் பல பொருள்களைப் பரிசு கொடுத்தான். உணவுப் பொருள்களும் கொடுத்து, ஒரு வீடும் கொடுத்தான்.

பாண்டியனின் சிறப்பைப் பெற்ற ஏமநாதன் 'தனக்கு நிகர் யாரும் இல்லை' எனக் கர்வம் அடைந்தான். அதனைப் பாண்டியன் அறிந்தான். தன் அரசவைப் புலவரான பாணபத்திரரை அழைத்தான். "ஏமநாதனுடன் போட்டியிட்டுப் பாட முடியுமா?" என்று கேட்டான்.

பாணபத்திரர், "தங்கள் ஆதரவாலும், மதுரை நாயகர் திருவருளாலும் முயன்று பாடி, அவன் செருக்கை அடக்குவேன்" என்று கூறினார். "சரி, நாளைப் பாடுக" என்று மன்னவன் கூறினான்.

பாணபத்திரர் அதற்குச் சம்மதித்துத் தம் வீட்டிற்கு வந்தார்.

வரும் வழியில், ஏமநாதனிடம் இசை பயிலும் மாணவர்கள், குற்றமின்றி இசை பாடுவதைக் கேட்டார்.

"ஏமநாதனின் மாணவர்கள் பாடும் யாழ் இசையே இவ்வளவு நன்றாக இருக்குமானால், அவன் பாடும் இசை எவ்வளவு நன்றாக இருக்குமோ? அவனை எப்படி நாம் வெல்வது?" என்று பாணபத்திரர் தமக்குள் எண்ணிக்கலங்கினார்.

பாணபத்திரர் மதுரை நாயகர் கோயிலை அடைந்தார், "இறைவனே! தாங்கள்தான் எனக்கு அருள் புரிய வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு வருத்தத்துடன் வீட்டிற்குச் சென்றார்.

மதுரை நாயகர், பாணபத்திரருடைய வருத்தத்தைப் போக்க எண்ணினார். வயது முதிர்ந்த ஒரு விறகுத் தலையராய் வேடந் தாங்கினார்.

அழுக்கடைந்த ஆடையை உடுத்திக்கொண்டார். தோளிலே ஒரு பழைய யாழை மாட்டிக் கொண்டார். தலையிலே விறகுக் கட்டைச் சுமந்துகொண்டு வந்தார்.

மதுரை நகர வீதியில் நடந்து சென்று விலை கூறினார். கேட்போர் வாங்க முடியாத அளவுக்கு, அதிக விலை கூறினார். ஒருவரும் வாங்கவில்லை. பல வீதிகளையும் கடந்து ஏமநாதன் வீட்டை அடைந்தார். அப்பொழுது இருட்டி விட்டது. வீட்டின் பக்கத்திலே விறகுக் கட்டை ஊன்றி வைத்தார். அவன் வீட்டுத்திண்ணையில் அமர்ந்துகொண்டு யாழை மீட்டி இசை பாடினார். இனிய இசை ஓசை கேட்ட ஏமநாதன் வெளியே வந்தான். "நீ யார்?" என்று கேட்டான்.

விரகாளாய் வந்த சிவபெருமான், 'யான் யாழில் வல்ல பாணபத்திரரின் அடிமை' என்று கூறினார். மேலும், "அவரிடம் பலர் இசை பயிலுகின்றார்கள். யானும் இசை பயில ஆசைப்பட்டு அவர் மாணவன் ஆனேன். உனக்கு வயதாகி விட்ட படியால், நீ முதுமை அடைந்து விட்டாய். எனவே, இனிமேல் இசைகற்கும் தகுதி உடையவனில்லை' என்று கூறி நீக்கி விட்டார். ஆகவே, விறகு வெட்டி, விற்றுப் பிழைக்கின்றேன்" என்று கூறினார்.

ஏமநாதன், விறகாளைப் பார்த்து "நீ முதலில் பாடிய இசையை மறுபடியும் பாடுக" என்று கூறினான்.

விறகாளாகிய சிவபெருமான் சம்மதித்துப் பாடத் தொடங்கினார். பாடும்பொழுது இசை இலக்கண முறைப்படி பாடினார். எட்டுவகையான உடல் தொழிற் குற்றங்களும், குரல் ஓசைக் குற்றங்களும், பாடல் தொழில் குற்றங்களும் உண்டாகாமல் பாடினார்.

அவர் பாடிய இசையைக் கேட்டு மரங்கள் அசையவில்லை, கடல், அலை அடங்கியது. அருவியும், ஆறும் அமைதி அடைந்தன. நான்முகன், இறைவன் திருவடியில் தங்கினான். திருமால் இன்ப வெள்ளத்தில் துயின்றார். இந்திரன், "ஆயிரம் கண்களும் ஆயிரம் காதுகளாக இல்லாமற் போய் விட்டனவே" என்று கூறி வருந்தினான்.

ஒன்றற்கு ஒன்று பகையான உயிரினங்கள் எல்லாம் இசையில்

மயங்கிப் பகைமையை மறந்து நின்றன. பட்ட மரங்கள் எல்லாம் பசு மரங்கள் ஆயின. இங்ஙனம், உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் இசைமயமாயின.

விறகாளாக வந்த இறைவன் பாடிய சாதாரி என்ற பண்ணை ஏமநாதன் கேட்டான். உடலும் உள்ளமும் உருகினான். அவன், தன்னை மறந்து இசைமயமாகி நின்றான். அப்பொழுது, விறகுத் தலையாராக வந்த சிவபெருமான மறைந்தார்.

பிறகு, ஏமநாதன் சுய உணர்வு அடைந்தான். "இது நாம் கற்ற சாதாரிப்பண் அன்று. இவ்வுலகில் இசை அறிந்ததாகக் கூறினவரும் இல்லை. இது தெய்வ இசையேயாகும். இதை இவனுக்குக் கற்றுக் கொடுத்தவர் மனிதரல்லர். இறைவனே ஆவார். பாணபத்திரரால் விலக்கி விடப்பட்ட முதியவனின் இசையே இங்ஙனம் இருந்தால், பாணபத்திரரின் இசை எப்படியிருக்குமோ?" என்று தனக்குள் எண்ணி அச்சம் அடைந்தான்.

ஏமநாதன், அன்று இரவோடு இரவாக வடக்கு நோக்கிப் புறப்பட்டான். பேழைகளையும், யாழையும், அங்கேயே போட்டு விட்டு ஓடி விட்டான்.

அன்று இரவு இறைவன் பாணபத்திரரின் கனவிலே வந்து தோன்றினார். "பாணபத்திரனே! ஏமநாதன் வீட்டிற்கு விறகுத் தலையாளாகச் சென்று, பத்திரரின் அடிமை எனக்கூறி, இசைபாடி வென்று உன் வேண்டுகோளை நிறைவேற்றி விட்டேன்" என்று கூறினார்.

கனவு கண்ட பாணபத்திரர் கண் விழித்தெழுந்தார். விடியுமுன் கோயிலுக்குச் சென்றார். "இறைவனே! என் பொருட்டு விறகைத் தலையிலே சுமந்துள்ளீர்கள். பாதங்கள் நோவ நடந்துள்ளீர்கள். 'பாணபத்திரனின் அடிமை' என்று, கூறத்தகாத வார்த்தையே வேறு கூறியுள்ளீர்கள். இது தருமமா? இதற்காகவா யான் உங்களிடம் வந்து முறையிட்டேன். என் பொருட்டுத் தாங்கள் எளியவராகி அருளிய செயலை எங்ஙனம் புகழ்வேன்?" என்று பலவாறாகப் போற்றித் துதித்தார். பிறகு, அரண்மனைக்குச் சென்றார்.

வரகுண பாண்டியன் பாணபத்திரரை வரவேற்று அமரச் செய்தான். இசைப் போட்டிக்கு ஏமநாதனை அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினான்.

பணியாட்கள் ஏமநாதன் வீட்டிற்குச் சென்றனர். ஏமநாதன், வீட்டில் இல்லாதபடியால் பக்கத்து வீட்டில உள்ளவர்களைக் கேட்டனர்.

"நேற்று இங்கு இருந்தான். நேற்று இரவு ஒரு முதியவன் விறகுச் சுமையுடன் வந்து 'பாணபத்திரரின் அடிமை' என்று கூறி இசை பாடினான். அவ்வளவுதான் தெரியும். அதற்குப் பிறகு 'என்ன நடந்தது?' என்று தெரியாது. ஆனால், அவன் நள்ளிரவிலே வடதிசை நோக்கிச் சென்று விட்டான்" என்று பக்கத்து வீட்டுக்காரர்கள் கூறினர்.

இச்செய்தியைப் பணியாட்கள் பாண்டியனிடம் கூறினர். கேட்ட பாண்டியன் வியப்படைந்தான். "அவன் எப்படிப் போயிருக்க முடியும்? பாணபத்திரரே! நீர், நேற்று இங்கிருந்து சென்ற பின் நடந்தது என்ன?" என்று கேட்டான்.

பாணபத்திரர், தாம் கோயிலுக்குச் சென்று இறைவனை வேண்டியதையும், நேற்று இரவு விறகுத் தலையராய்ச் சென்று இசைபாடி ஏமநாதனை வென்றதாக இறைவன் கனவில் தோன்றிக் கூறியதையும் விவரமாகக் கூறினார்.

பணியாட்கள் கூறிய செய்தியும், பாணபத்திரர் கூறிய செய்தியும் ஒத்திருந்தபடியால், 'இது மதுரை நாயகன் திருவிளையாடலே' எனப் பாண்டியன் உணர்ந்தான்.

பாண்டியன், பாணபத்திரரை யானைமீது அமர்த்தி ஊர்வலமாக அழைதது வந்தான் வேண்டிய பொருள்களைக் கொடுத்துச் சிறப்புச் செய்தான்.

"பாணபத்திரரே! இறைவன் எளியவராகி உமக்கு அருள் செய்துள்ளார். எனவே, இனிமேல் நீர் எனக்குத் தலைவர் ஆவீர். யான் உம் அடிமை ஆவேன். இனி நம் இருவருக்கும் உள்ள தொடர்பு இதுதான். இனி மேல் நம் இறைவனைப் பாடுவதுதான் உங்கள் கடமையாகும். இதையே யான் உங்களிடம் வேண்டிக் கொள்ளுகின்றேன்" என்று கூறிப் பாண்டியன் அவரை வீட்டுக்கு அனுப்பி வைத்தான்.

பாணபத்திரர், தமக்குக் கிடைத்த பரிசுப் பொருள்களை நாவலர்க்கும், தம் மாணவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்தார் தம் சுற்றத்துடன் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தார்.

# தெய்வ வழிபாடு

பெரும்புலர் காலை மூழ்கிப்பித்தற்
குப் பத்த ராகி
அரும்போ துமலர்கள்கொண்டாங்
கார்வத்தையுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதி
யிஞ லிடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார்
கடவூர்வீரட்ட ஞரே.

—திருநா. தேவா.

'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்ற மாணிக்க வாசகத்தின்படி, சிவனை வழிபடுதலும் அவனருளைப் பெறுதலும் எவ்வாறும் எனின், சிவத்தை மனத்திலிருத்தி இடைவிடாது தியானித்தலால் ஆமென்பது. தியானமாவது மனத்தை வேறு வழியிலே செல்லவிடாமல் கடவுளிலே நிறுத்துதல் என்பதாம். இஃது எளிதிற் சித்திப்பதன்று. உலகப்பற்றிற்படிந்த உள்ளம் ஓயாமல் உலக விஷயங்களிலேயே செல்லும்; ஓரிடத்தில் நில்லாது. அருபியாகிய ஒரு பொருளை நினைத்தலும் தியானித்தலும் முதலிற் சாத்தியம் ஆகாது. உருவும் குணமும் உள்ள பொருளாகப் பாவித்து அந்தப் பொருளிடத்திற் பத்தி பண்ணுதலே ஏற்ற சாதனமாம். உயிர்களிடத்துக் கொண்ட பேரருளே 'தன்னை நேரிலாப்பரம்பொருள் தனி உருக்கொண்ட' தன் காரணமாம். அப்பரம்பொருளினது அருட்குணங்களையும் செயல்களையும் நினைத்தலினாலும், புகழ்களைப் படித்தலினாலும் மனம் படிப்படியாய்ப் புறஞ் செல்லாமல் வசப்படுவதாகும். இறைவனது அருளுருவை மஞ்சனம் மலர் தூபம் தீபம் நிவேதனம் என்பன கொண்டு பூசித்தலினால் மனம் தூய்மையுறும். பலமுறையும் பயின்று பயின்று வரவே சித்தத்தை ஒரு வழிப்படுத்தித் தியானத்தில் நிறுத்துதல் சாத்தியமாகும்.

அதனால், மனத்தைப் புலன் வழியில் செல்லவிடாமல் கடவுள் வழியிற் செலுத்துதற்கண் முதற்படியான சாதனமாக இருப்பது கடவுள் வணக்கமாகிய தோத்திரங்களைப் படிப்பது என்பது. அதுவும் அவற்றின் பொருளை அறிந்து படித்தாலல்லது பெரும் பயனைத் தராது; ஏனெனில் அறியாதது ஒன்றில் ஆர்வங்கொண்டு மனம் படியாது ஆகலினென்க. தேவத் தோத்திரங்களைப் படித்து அன்பு செய்தற்கும் ஒருவர்க்குப் பூர்வ புண்ணியம் வேண்டுமென்பர்பெரியோர்.

என்ன புண்ணியஞ் செய்தனை
நெஞ்சமே இருங்கடல் வையத்து
முன்னை நீபுரி நல்வினைப் பய
னிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்
சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும்
பாடியும் வழிபடுமதனாலே.

—திரிஞான. தேவா.

என்பதனாலும் அறியப்படும். மேற் கூறிப்போந்த ஏதுக்களால் கடவுள் வழிபாட்டில் கருத்துடைய அன்பர்கள் திரிகரண சுத்தியும் காரிய சித்தியும் பெற்று இன்புற்றுப் பயனடையுமாறு, அநுபூதிச் செல்வர்களாகிய ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் சிவனது அருட்சத்தியாகிய தேவிபேரில் வடமொழியில் அருளிச் செய்த சில தோத்திரங்களை ஓதி இன்புற வேண்டும். உலக மாதாவாகிய பராசக்தி கிருபை செய்வாளாக.

—நன்றி காமகோடிபிரதீபம்

# மாநகர் காசி

காசி மாவட்டத்தின் தலைநகர். கங்கையுடன் கலக்கும் வருணை, அசி ஆகிய இரு துணையாறுகளின் இடையில் உள்ளது. காசியின் பழைய பெயர் வாரணாசி. இது உத்தரப் பிரதேசத்தின் இரண்டாவது பெரிய நகரம்.

கல்கத்தாவிற்கு வடமேற்கில் 400 மைல் தூரத்தில் உள்ளது. இந்துக்களுக்கும் சீகியருக்கும் பௌத்தருக்கும் புண்ணிய நகரம்; வாணிக நகரமாகவும் திகழ்கின்றது. பித்தளைப் பாத்திரம் செய்தல், பட்டு நெசவு, சரிகை வேலை நகை முதலிய அணிகலங்கள் செய்தல், பொம்மை செய்தல் ஆகியவை சிறப்பான கைத்தொழில்கள். காசி முக்கியமான நகரங்களுடன் ரெயில் பாதையால் இணைக்கப்பட்டுள்ளது.

வேதகாலத்தின் பிற்பகுதியிலிருந்தே காசி புகழ்பெற்ற நகரம். மகாபாரதம் இராமாயணம் முதலிய பண்டை நூல்களிலும் காசி புகழ்ந்து கூறபபட்டுள்ளது. புத்தர் தோன்றுவதற்குமுன், கி. மு, ஏழாம் நூற்றாண்டில் இங்கு ஜனநாயக ஆட்சி நடந்து வந்தது. காசி மௌரிய குப்தப் பேரரசின் முக்கியமான வாணிக நிலையமாக விளங்கியது. குப்தர்களிடமிருந்து, கோரி முகம்மது காசி நகரைக் கைப்பற்றினர். வடநாட்டில் பல முஸ்லிம் இராச்சியங்கள் ஏற்பட்ட காலத்தில் இது ஜான்பர் இராச்சியத்தில் சேர்ந்திருந்தது

பதினெட்டாம் நூற்றாண்டில் அயோத்தி இராச்சியத்தில் முகம்மதாபாத் என்ற அரசியல் பெயருடன் சேர்ந்திருந்தது. 1722-ல் நவாப் சஆதத்கான் மன்ஸாராமைக் காசியின் வரி வசூலிக்கும் அதிகாரியாக நியமித்தார். இவர் வழிவந்தோர் காசி மன்னர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். 1775-ல் காசி ஆங்கிலேயர் வசப்பட்டது.

அக்பர் ஆட்சியில் அலகாபாத் பகுதியில் இது ஒரு முக்கியமான நகரமாயிருந்தது. 1763-ல் ராஜா ஜயசிங்கு இங்கு வானாராய்ச்சி நிலயத்தை நிறுவினர்.

புனிதமான காசி இந்து சமயங்களின் வளர்ச்சிக்கு நிலைக்களனாக விளங்கி வருகிறது. வியாசர் முதலிய முனிவர்களும், மகாவீரர், புத்தர், சங்கரர், துளசிதாசர் முதலிய பல சமய ஆசிரியர்களும் வாழ்ந்த இடம் காசி.

பல நூற்றாண்டுகளாக வடமொழிக் கல்வி ஓங்கி வந்த காசியில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பெசண்ட் அம்மையார் நிறுவின இந்துக் கல்லூரி பண்டித மதன் மோகன மாளவியாவின் தியாகத்தினாலும் பெருமுயற்சியாலும் இந்துப் பல்கலைக் கழகமாக வளர்ச்சியடைந்தது.

காசியில் நூற்றுக்கணக்கான கோயில்கள் உள்ளன. விசுவநாதர், அன்னபூரணி, விசாலாட்சி, தர்க்கை, பிந்துமாதவர், கேதாரேசுவரர் கோயில்கள் முக்கியமானவை.

அவைகளில் பெரும்பான்மையானவை ராஜபுத்திர வீரர் மான்சிங் என்பவரால் கட்டப்பெற்றவை. ஔரங்கசிபு காலத்தில் இடிக்கப்பட்ட விசுவநாதரின் கோயிலை இந்தூர் மகாராணி அகல்யாபாயும், மற்றவைகளை மகாராஷ்டிர அரசர்களும் பிரபுக்களுக்கும் புதுப்பித்தார்கள்.

காசியில் யாத்திரா மார்க்கம் 36 மைல் சுற்றளவு கொண்டது. இது பஞ்சக்குரோச யாத்திரை எனப்படும். கங்கையாற்றின்படித் துறைகள் எல்லாமே புனிதம் என்றாலும், மணிகர்ணிகை, கேதார கட்டம், தசாச்வமேதம், அனுமக் கட்டம் ஆகியவை சிறப்புமிக்கவை.

காசியில் அறநிலையங்கள் உள. ஸ்ரீராமகிருஷ்ண விவேகாநந்த மடத்தினர் நடத்தும் பெரிய மருத்துவசாலை ஒன்று உள்ளது.



# தண்டாயுதபாணி வழிபாடு



நகரத்தார்கள் அனைவரும் சைவராக இருந்தும் வெளிநாடுகளில் அவர்கள் சிவபெருமானை விடத் தண்டாயுதபாணிக்கே மிகுதியாகக் கோவில் கட்டியும் விழா எடுத்தும் வருகின்றனர்.

காரணம் சிவாலயங்கள் சிவ ஆகம விதிப்படி நிறுவப்பட்டு அவ்வாறே சிவபெருமான் வழிபடப்பெற வேண்டும். அந்த ஆகம முறைகளை வெளிநாடுகளில் கடைப்பிடிக்க இயலாது. முறை தவறி நடக்க நேரின் ஏற்படும் அபசாரத்துக்கு — சிவ அபசாரத்துக்கு — நிவர்த்தி செய்ய வழியில்லை.

மேலும் சிவலிங்கத்தைப் பூசை செய்வது கிரகஸ்த சிவாச்சாரியார்களால் மட்டுமே செய்யப்பட வேண்டும். சான்று திருவிளையாடற் புராணத்தில் தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம் தொழில் செய்யும் தொலை தூரங்களில் நியமநிஷ்டையுடன் இருப்பதிலுள்ள இன்னலை நகரத்தார்கள் உணர்ந்திருப்பதிலிருந்து அவர்களுடைய அடக்கமும் பக்தியுணர்ச்சியும் புலனாகும்.

மன்னிக்கும் தன்மை தண்டாயுதபாணிக்கு உண்டு. தாங்கள் செய்யக்கூடிய சிறு தவறுகளை மறந்து மன்னித்துத் தங்களை வாழவைக்க வேண்டும் என்பதை கருத்திற்கொண்டு, இவர்கள் சிறப்பிடம் தந்துள்ளனர். கோவில் கட்டுவதற்கு முன் அல்லது கோவில் கட்ட இயலாத சிறு ஊர்களில் தண்டாயுதபாணி படத்தை வைத்து வழிபடுவதே வழக்கம்.

முருகன் என்றும் தண்டாயுத பாணி என்றும் சுப்பிரமணியர் என்றும் தமிழ் மக்கள் போற்றும் இறைவனை வடஇந்தியாவில் பிரபலப்படுத்தியவர்கள் நகரத்தார்கள் ஆவர். கல்கத்தாவில் ஒரு பெரிய அறிஞர் நகரத்தார் தொடர்பால் தமிழ் மொழி பயின்று, சுநீதி குமார் சாட்டர்ஜி

என்ற தம் பெயரை 'நன்னெறி முருகன்' என்று ஆக்கிக்கொண் டிருக்கிறார்.

வீடுகளில் பூசை போடும் போது, வேல் ஊன்றிப் பூசை போடுவதும் அதற்குச் சுப்பிர மணியர் பூசை என்று பெயரிடு வதும் மரபு சுப்பிரமணியருக்கு எத்தனை பெயர்கள் உண்டோ அத்தனை பெயர்களும் செட்டி யார் சமூகத்தில் வழங்கக் காண லாம்.

நகரத்தார்கள் வாழும் சில ஊர்களில் ஏற்கனவே சிவன் கோவில்கள்—சிவகங்கை ஜமீன் தார் முதலியவர்களால் கட்டப் பட்டிருந்தன. அவ்வூர்களில் நக ரக் கோவில் கட்ட முடிவு செய்த போது, நகரத்தார்கள் தண்டா யுதபாணிக்கே கோவில் கட்டியுள் ளனர். கல்லுப்பட்டி, சூழிபிறை, கோனபட்டு, நெற்குப்பை ஆகிய ஊர்களிலும் உலகம்பட்டி ஞானி யார் மடத்திலும் நகரத்தார்கள் சுப்பிரமணியர்க்குச் கோவில்கள் அமைத்துள்ளனர். ●

○ பொய் என்று தனியாக ஒன்றுமில்லை. பொய்யனே அவன் செய் ததை மாற்றிப் பேசுவதாகும். பேய் என்று தனியாக எதுவும் இல்லை. மெய்யனே பயந்து தன் எண்ணத்தின் பிரதிபலிப்பால் தான் எண்ணியவாறு பேயைஉண்டாக்கிக் கொள்கிறான்!

---

## நீங்கள் மனப்பக்குவம் அடைய வேண்டுமா?

தினசரி ஒருமுறை அல்லது இருமுறை ஸ்ரீஅபிராமி பட்டர் அருளிச் செய்த அபிராமி அந்தாதியில் 92 வது பாசுரம் பாராயணம் செய்யுங்கள். அந்தப் பாசுரம்

பதத்தே உருகிநின் பாதத்திலே மனம் பற்றி உன்றன்
இதத்தே ஒழுக அடிமைகொண்டாய் இனியான் ஒருவர்
மதத்தே மதிமயங்கேன் அவர்போன வழியும் செல்லேன்
முதத்தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ்நகையே

# வாழ்வின் தத்துவங்கள்



ஸ்ரீ சுவாமி
**சிதானந்தா**

புதிய வருஷத்திற்கு முதலில் நாங்கள் ஆத்ம பரிசோதனைசெய் துக்கொள்ள வேண்டும். நாம் நம் முடைய லட்சியத்தில் எவ்வளவு முன்னேறிஇருக்கிறோம். இன்னும் எவ்வளவு செல்லபாக்கி இருக்கி றது. வழியில் உள்ள முட்களை நாம் எவ்வளவு அகற்றி இருக்கிறோம். எவ்வளவு பூஞ்செடிகளை வைத்து இருக்கிறோம். லட்சியம் கைகூடும் வரையில் ஒய்வு இல்லாமல் தொடர்ந்து இலட்சியத்தை நோக்கிபோய்க்கொண்டேஇருக்க வேண்டும்.

மோகத்தை குறைப்பதே, இல் லாமல் செய்வதே வைராக்கியம் ஆகும். மனிதனிடம் விஷய சுகங் களில் மோகம், அன்பு உண்டா கிறது. யாரிடம் மோகம் இல் லையோ அவனே வைராக்கிய புரு ஷன் விரக்தி பாவனை இருக்கிறது. விஷய சுகங்களில்இருந்துகொஞ்ச வைராக்கியம் அடைவது மட்டும் போதுமானதாகாது. வைராக்கிய புருஷன் தொடர்ந்து அப்பியாசம் செய்துகொண்டே இருக்கவேண் டும். விஷய சுகங்களிலிருந்து இந் திரியங்களை ஒடுக்கிக்கொண்டு பர மானந்த சொருபத்தின் பக்கமாக நோக்கிக் கொண்டிருப்பதே வை ராக்கியமாகும்.

மனிதத்தன்மை ஏதோ தூரத் தில் உள்ள பொருள் அல்ல. அது ஒரு கனவோ, கற்பனையாகவோ, அல்ல, அது உனக்கு அருகில்இருக் கிறது. முன்னால்இருக்கிறதுநாலா பக்கங்களிலும் இருக்கிறது. தன்

னுடைய அண்டை வீட்டுக்கார னிடமிருந்தே இந்தப் பாடத்தை ஆரம்பித்துக்கொள்.

இன்றைய வேலையை நாளைக்கு என்று தள்ளிப்போடாதே. நேரத்தை வீணாக்காதே கடந்த காலம் ஒரு போதும் திரும்பி வராது. நீ சாதகன். நீ எங்கேயிருந்தாலும், எந்த நிலையில் இருந்தாலும் புத்தி விவேகத்தோடு வேலை செய்.

எல்லாவிதமான காரியங்களை யும் யோக நோக்கத்துடனும், ஈசுவர வழிபாட்டு முறைகளுடனும் செய். தெய்வீக வாழ்க்கை வாழ். வயது வரையறுக்கப்பட்டது. நேரம் வேகமானது. இதேவாழ்க் கையில் ஈசுவர சாக்ஷாத்காரம் அடைந்துவிடும்.

நமக்கு குருமகராஜ் அவர்கள் எல்லாமே கொடுத்து இருக்கிறார். எந்த ஒரு மனிதன் தெய்வீக வாழ்க்கை வாழ விரும்புகின் றானோ, அவனை தேனீக்களுக்குஒப் பிடலாம்.

தேனீ சுயநலமில்லாமல் வாழ் நாள் பூராவும் நல்ல வாசனை உள்ள பூக்களிடமிருந்து உலகத் திற்கு அமிர்தம் போன்ற தேனைக் கொடுக்கிறது. நம்முடைய குரு தேவர் ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தஜி மகராஜ் அவர்கள் எல்லா நீதி நூல்களிலிருந்தும் உபதேசம் என்ற அமிர்தத்தைக் கொடுத்து உலகத்திற்கு அமரத்துவத்தை பெற்றுக் கொள்ளவும் ஆத்ம சாக்ஷாத்காரம் செய்துகொள்வ தற்கும்அரியவாய்ப்பைக் கொடுத் திருக்கிறார். வாருங்கள், இந்த அமிர்தத்தைப் பருகுவோம்,இதே ஜன்மத்தில் முக்தி அடைந்து விடு வோம்.

நேரத்தின் வேகம் நிற்பதில்லை. ஆண்டுக்குப் பிறகு ஆண்டுகளாக கழிந்து போய்க்கொண்டேயிருக் கிறது. ஒரு நாள் இந்த வாழ்வு முடிந்து போகக்கூடியது. எந்த மனிதன் இந்த இரகசியத்தை தெரிந்து கொள்ளமாட்டானோ அவனுடைய வாழ்வு வீணான விஷ யங்களிலேயே நஷ்டமடைந்து போகிறது.

அறிவுள்ள மனிதன் இந்தமானி டப்பிறவி ஏன் கிடைத்திருக்கிறது என்று யோசிக்கிறான். வாழ்க்கை யின் குறிக்கோள் ஆத்ம சாக்ஷாத் காரம் செய்துக் கொள்வதே தான்.

வைதிக தர்மம், சனாதன தர்மம் இந்த இரண்டிற்கும் எந்த ஒரு வித்தியாசமும் இல்லை. இரண்டிற் கும் ஆகாரம் வேதமே. வித்தியா சம் நம்முடைய கண்களே. ஆரிய சமாஜிகள் வேதங்களை மட்டும் ஆதாரமாக ஒப்புக் கொள்கிறார் கள். சனாதனிகள் புராணங்களி லும் நம்பிக்கை வைக்கிறார்கள். சாமானியமானவர்களுக்குவேதம் அறிவுக்கு எட்டாமல் இருந்தது, ஆகையால் அரைகுறை படிப்பா ளிகளுக்கும், படிக்காதவர்களுக் கும் புராணங்கள் பயன்பட்டன.

நம்முடைய தர்மத்திற்கு ஆதா ரம் வேதம், சுருதிகள். நமது பண்

பின் தோற்றங்கள் இவைகளில் இருக்கின்றன. ஆனபடியால் நம்முடைய தர்மம் சத்தியம், சிவம் சுந்தரம் என்ற எண்ணங்களால் ஆனவை. முடிவில் இதற்கு எதிரான தத்துவங்கள் இதைத் தொட்டுப் பார்க்கவும் முடியவில்லை.

குடி என்ற கெட்டப்பழக்கம் அநேக அறிஞர்களை நாசப்படுத்தி விட்டது. குடிகாரன் தன் குடும்பத்திற்கு ஒரு சாபக்கேடு. அவன் தன் தாய்க்கு பெரிய துன்பமாக மாகவும், மனைவிக்கு கொடிய மிருகம் போலவும், குழந்தைகளுக்கு வெட்கக்கேடாகவும் காட்சியளிக்கிறான்.

தன் பக்கத்து வீட்டுக்காரர்களுக்கு ஆபத்தாகவும் அரசாங்கம், (அல்லது) தனிப்பட்ட எஜமானனுக்கு ஒரு கஷ்டமான பிரச்சனையாக ஆகிவிடுகிறான். ஒரு குடிகாரன் சமூகத்திற்கு கலங்கமாகவும், அத்தெருவில் உள்ளவர்களுக்குஉபத்திரமாகவும்,அங்குள்ள போலீஸ்காரர்களுக்கு தலைவலியாகவும் இருக்கிறான். இந்தமாதிரியான மனிதன் முன்னேற்றமான நாட்டிற்கு யோக்கியமான குடிமகன் என்று ஒரு காலும் ஆகமுடியாது. அவனுடைய காரியங்கள் எப்பொழுதும் தீமைகளாகவும், அவனுடைய ஒழுக்கம் எப்பொழுதும் நம்பிக்கை இல்லாத வகையிலும், அவனுடைய உடல் நிலை மோசமாக இருந்துகொண்டு எப்பொழுதும் பாரமாகவே இருப்பான். அவன் எல்லாவித முன்னேற்றங்களுக்கும் தடையாகவே இருப்பான்.

வாழ்க்கை என்ன நம்பிக்கை உள்ளது! உள்ளே போன மூச்சு வெளியே வருமா அல்லது இல்லையா என்ற என்ன நம்பிக்கை! நாம் இந்த உலகத்திற்கு எதற்காகவந்தோம் என்று எப்பொழுதும்யோசித்துக்கொண்டேயிருக்க வேண்டும். யார் எங்களை இங்கே அனுப்பியிருக்கிறார் என்று யோசிக்க வேண்டும். நேரம் இருக்கும்போதே விவேகம், ஞானம், புத்தியை நன்றாக உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும். மனிதனுடைய பிறப்பு தெய்வீக வாழ்க்கை வாழ்வதற்காக கிடைத்திருக்கிறது. லௌகிக—அலௌகிக முன்னேற்றங்களை வேதாந்த ரூபமாக உணர்ந்து கொள்வதற்கு இந்தப் பிறப்பு கிடைத்திருக்கிறது

மோசமானமனிதப்பிறவியுடன் ஒன்றரக் கலக்கும்தோற்றமே சம்சார சாகரத்தில் சிக்கிக் கொள்வதற்கு ஒரு பெரிய காரணம் இதுவே மனிதனுக்கு அதிருப்தி, போராட்டம் மேலும் துன்பத்திற்கு வேர். இதுவே மனிதனின் பெரிய மறதி, தவறு. இது மடத்தனம். அஞ்ஞானம் ஆத்மஞானத்தால் இதை வெல்லுவாயக. ●

● பலமின்மை அச்சத்தை வளர்க்கிறது. அச்சமோ அவ நம்பிக்கையையே உண்டாக்குகிறது!

—காந்திஜி

# மிட்டாய்த் திருவிழா

'சோமலெ'

காசி விசுவநாதர் கோவிலில், விசுவநாதர் சந்நிதி உள்ள கருவறைக்கு வெளியே உள்ள முன் மண்டபத்தில் ஒரு சிவலிங்கம்,விசுவநாதரைப் போலவே இதுவும் ஒரு தொட்டியினுள், இருக்கிறது. தீபாவளிக்கு அடுத்த நாள், இந்த லிங்கத்தைச் சுற்றியும் உயரேயும் லட்டுகளால் கூம்பிய வடிவமொன்றை அமைப்பது மரபு. தேர் போன்ற உருவ அமைப்பையுடைய இதன் உயரம் இரண்டடி இருக்கலாம். அன்று விசுவநாதரின் திருமுன்பும், பல்வேறு வகையான இனிப்புக்களை அடுக்கிவைத்துப் பின்னர்ப் பிரசாதமாக வழங்குவ ர்கள். இதற்கும் முன் கூட்டியே பணம் செலுத்திச் சீட்டுப் பெற்றிருக்கவேண்டும்.

எந்த நாளிலும் வட நாட்டு மக்கள் நினைத்த மாத்திரத்தில் விசுவநாதருக்குச் சர்க்கரை, கோவா (பால்கோவா), ஆட்டா மாவு ஆகியவற்றைக் கலந்து பல வண்ணங்களில் படைக்கின்றனர். இவற்றை எங்கே செய்ய வேண்டும் என்ற வரையறை எதுவும் இல்லை. படைக்கும் பொருள்களை மூடிபோட்டு கோவிலுக்குக் கொண்டு போவதுமில்லை. இதனால் மிகப் பெரிய குளவிகள் விசுவநாதப் பெருமானுக்குப் படைக்கும் பொருள்களை மொய்க்கும். புதிதாக காசிக்குச் செல்பவர்களுக்கு இதைப்பாாத்ததும் அருவருப்பு ஏற்படும்.

விசுவநாதர் கோவிலின்மடைப் பள்ளியில் பண்டா (சிவாச்சாரியார்) காசியில்விசுவேசர்க்கு நிவேதிக்கப்படும் அன்னம், நகரத்தார் விடுதியில் இருந்து மங்கல வாத்தியங்களுடன் வருகிற நிவேதனம் ஒன்றே, இது மட்டுமே கோவில் மடைப்பள்ளியில் ஆசாரப்படி பிராமணர்களால் செய்து, இலையால் மூடிப் படைக்கப்படுகிறது. இப்போது உள்ள மடைப்பள்ளியும் நகரத்தார் கட்டிக் கொடுத்ததே.

நகரத்தார் நிவேதனம்:—

| | | |
|---|---|---|
| திருவனந்தல் | — | பத்தாஸ் மிட்டாய் (பொறி பேசன்றது. நீண்ட நாள் உபயோகத்துக்கு ஏற்றது.) |
| உச்சிக்காலம் | — | பருப்புப் பொங்கல். ஏகாதசி நாளில் அல்வா. திங்கட்கிழமைகளில் கோதுமை ரொட்டி. |
| இராக்காலம் | — | சர்க்கரைப் பொங்கல். |

● சிவன் என்னும் நாமத்தை நாம் எவ்வளவு ஜெபிக்கிறோமோ அவ்வளவு நாம் செய்த பாபம் போகிறது. சிவனுடைய உருவத்தை மனத்தில் நினைத்துக் கொண்டாலே போதும். அதுவும் நாம் செய்த பாபத்தைப் போக்கும்.

● ஆரோக்ய விதிகளை அனுசரித்தல், எதிலும் மிதமாய்இருத்தல், உடற்பயிற்சிசெய்தல் முதலியவைகளினுல் உடல் வலிவடையும்.

● இந்து மதம் மற்ற மதங்களுக்கெல்லாம் காலத்தால் முந்தியது. இவ்வுலகிலுள்ள மத நூல்களில் மிகமுந்தினது ஹிந்து மத ரிக்வேதமே என்பது பண்டிதர் மாக்ஸ் முல்லர் கொள்கையாகும்.

● காலையில் எழுந்தவுடன் முகங் கழுவி, வடக்குத் திசையையாவது கிழக்கு திசையையாவது, பார்த்திருந்து விபூதி தரித்து, காலை ஜபஞ்செய்து, தோத்திரப் பாடல்கள் பாடி இறை வணக்கம் செய்ய வேண்டும்.

● நாம் இரவில் தூங்குவதற்கு முன் வடதிசை நோக்கியிருந்து கடவுளை வணங்கி, வடக்கொழிந்த திசைகளில் தலை வைத்து வலக்கை மேலாகப் படுக்க வேண்டும். அதிகாலை சூரியோதயத்துக்குள் நித்திரை விட்டு எழுந்திருக்க வேண்டும்.

● சூடத்தை தேங்காய்எண்ணெயில் கலக்கி சுளுக்கியுள்ள இடத்தில் அழுத்தித் தேய்த்துவர சுளுக்கு குணமாகும்.

● சிம்ம ராசியில் குரு இருக்கும் ஓர் ஆண்டு முழுவதும் கோதாவரியில் நீராடுவதற்கு மிகவும் சிறப்பானது. அப்போது கோதாவரியில் நீராடினுல் அசுவமேதயாகம் செய்த பயனும் நூருயிரம் கோதானங்கள் செய்த புண்ணியமும் கிடைக்குமென்று புராணங்கள் கூறுகின்றன.

● தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து மேற்கே சுமார் ஐந்து மைல் தொலைவில் உள்ளது சுவாமிமலை என்னும் முருகத் தலம். இதுவே திருவேரகம் என்கிற நான்காவது படைவீடு.

● துணிகளில் எத்தனையோ வகை உண்டு. அதைப்போல தொழில்களிலும் வியாபாரங்களிலும் பலவகை உண்டு. அவரவர்களும் அந்தந்தத்துறைக்குத் தகுதியாக தம்மைத் தயாராக்கிக் கொள்ள வேண்டும்.

● வடநாட்டில் டில்லியில் உத்தரசுவாமி மலை மீது ஸ்ரீசுப்ரமணியர் ஆலயம் கட்டப்பட்டுள்ளது. இந்த ஆலயத்தின் கும்பாபிஷேகம் அண்மையில் காஞ்சி புதுப் பெரியவாள் முன்னிலையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. வடநாட்டில் ஸ்ரீ சுப்ரமணிய சுவாமிக்கு அமைக்கப்படும் முதலாவது கோவில் இதுவே ஆகும்'

● உலகத்தில் உள்ள பொருள்கள் பலவற்றிலும் சாணி ஒன்றே பிற நாற்றங்களைப் போக்கி தொத்து நோய்க் கிருமிகளைக் கொன்று, தான் நாருதிருக்கும் அரிய சக்தி வாய்ந்தது.

● எப்போதும் கீழேவிழாமல் இருப்பது புகழுக்குரியது அல்ல. விழும்போதெல்லாம் விழித்தெழுவதுதான் பெரும் புகழ் பெறுவதற்கான சிறந்த வழி.

● கடவுள் அன்பு மயமானவர். எனவே அப்போதைக்கப்போது பூமியில் அவரால் ஏற்படும் ஆபத்துக்கள் மறைமுகமான அருளாகவே இருக்க வேண்டும்.

● நரக வேதனை, ஜனன வேதனை, மரண வேதனை என்ற மூன்று வேதனைகளும் கூடி முடிந்த வேதனையே பசி வேதனை என்றார் ராமலிங்க சுவாமிகள்.

● பிறர் என்ன செய்கிறார்கள். என்ன செய்யவில்லை என்று மற்றவர்களின் குற்றங்களைப் பற்றி நீ எண்ணாதே. நீ செய்த வேலைகளில் எவை சரி, எவை சரியில்லை என்று ஆய்வதன் மூலம் உன் குற்றங்களை நீ எண்ணிப்பார்.

● நீ எதைத் தேடுகிறாயோ அதையே அடைவாய். கடவுளைத் தேடுபவன் அவரையே அடைவான். செல்வத்தையும், செல்வாக்கையும் தேடுபவன் அவற்றை அடைகிறான்.

● திருநீற்றை உடம்பில் பூசுவதால் தொத்து வியாதிகள் வராமல் தடுக்கலாம். சிறப்பாக நெற்றியில் பூசுவதால் ஞாபக சக்தியையும் புத்தி கூர்மையையும் அதிகப் படுத்தலாம்.

● இரண்டு சுவை மூன்று சுவை மாத்திரம் கூடிய உணவையும், வேண்டிய அளவின் மிகுதல், குறைதற் சுவையுள்ள உணவையும், காழ்ப்பு, இனிப்பு, உவர்ப்பு இம் மூன்றும் ஒருங்கு சேரக் கலந்த உணவையும் உண்ணலாகாது என்கிறது சுக்கிரநீதி.

● நம் சக்திக்குத் தகுந்தபடி திட்டமிடல் வேண்டும். நம் சக்திக்கு மீறித் திட்டமிடுவது தவறு. அப்போது எதையும் நம்மால் செய்ய முடியாது என்ற வருத்தமே மிஞ்சும்.

---

## பன்னிரண்டு ஆயுதங்கள்

வேலாயுதம்
சூலாயுதம்
தண்டாயுதம்
சாட்டை
கிண்கிணி
சங்கு
சக்கரம்
மழுவு
வில்லு
அம்பு
மந்திரவாள்
கண்டர கோடாரி

---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனாதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-600087 அச்சிடுபவர்: தொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், சி. ஐ. டி. நகர், சென்னை-600035